உயிர்வாழ்வார்:

நாராணும் தூர்த்தவரைப் பாழாக்கிப் பாண்டவர்க்கு
ஆராத இன்பம் அருளப் பிறந்த பிரான்

* * *

இன்னா மயில் போலும் கேகயமென் புள் போலும்
வெள்ளை அனம் போலும் விளிதுறை வேரிமலர்

*

[விளிது இறம்- பலவாத இறம்; வேரி- வாசனை, கேகய
மென்புள்- மென்மையான இசைக்கு உருகும் பறவை,]

* * *

தம்மை உகப்பாரைத் தாம் உகப்பார் என்னும் சொல்
தம்மிடையே பொய்யானால் சாதிப்பார் ஆரினியே!

* * *

ஒருமகள் தன்னையுடையேன் உலகம் நிறைந்த புகழால்
திருமகள் போல வளர்த்தேன் செங்கண்மால்
போல் வளர்த்தேன்

* * *

என் சொல்லும் பொய்யானால்
நானும் பிறந்தமை பொய்யன்றோ!
பேசி மறுப்பன கள்.
பேர்க்கவும் போமவே!

* * *

குழலினிது யாழினிது என்பதம் மக்கள்
மழலைச் சொல் கேளாதவர்

* * *

எண்ணிய எண்ணியாங்கு எய்துப எண்ணியார்
திண்ணியர் ஆகப் பெறின்

* * *

பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம்
கருமமே கட்டளைக் கல்

* * *

ஒறுத்தார்க்(கு) ஒருநாளை யின்பம் பொறுத்தார்க்குப்
பொன்றும் துணையும் புகழ்

* * *

பணிவுடையன் இன்சொலன் ஆதல் ஒருவற்கு
அணி; அல்ல மற்றுப் பிற.

* * *

மனத்தானாம் மாந்தர்க்(கு) உணர்ச்சி இனத்தானாம்
இன்னான் எனப்படும் சொல்

* * *

பிறர்க்கின்னா முற்பகல் செய்யின், தமக்கின்னா
பிற்பகல் தாமே வரும்.

* * *

மறத்தல் வெகுளியை யார்மாட்டும்; தீய
பிறத்தல் அதனான் வரும்

* * *

ஈன்ற பொழுதில் பெரிதுவக்கும் தன்மகனைச்
சான்றோன் எனக் கேட்ட தாய்

* * *

அன்பின் வழிய(து) உயிர்நிலை; அஃதிலார்க்கு
என்பு தோல் போர்த்த உடம்பு

* * *

அன்றறிவாம் என்னாது அறஞ்செய்க மற்றது
பொன்றுங்கால் பொன்றாத் துணை

* * *

நல்லா றெனினுங் கொளல்தீது மேலுலகம்
இல்லெனினும் ஈதலே நன்று

* * *

செய்யாமல் செய்த உதவிக்கு வையகமும்
வானகமும் ஆற்றலரிது

* * *

வேண்டிய வேண்டியாங் கெய்தலால் செய்தவம்
ஈண்டு முயலப் படும்.

* * *

ஊரில் பஞ்சத்தின் அடிக்கிறப்போ — நம்ப
ஒய்யாரச் சாய்பாடு சாய்கிடுவோம்
பாரிலே பட்டினி கிடக்கிறப்போ — நம்ப
பாயாசம் வச்சுப் பருகிடுவோம்.

*

பக்கத்து வீட்டிலே பசி கிடக்க நம்ப
பாக்கு வெற்றிலை போடலாமா
அக்கம் பக்கத்திலே பட்டினியாம் இங்கே
ஆட்டமும் கூத்தும் நடக்கலாமா.

*

கள்ளக் கடைகள் வெடிக்கலையா — நாட்டில்
கலப்படம் கூடியே போகலையா
உள்ள கடவுளை மறந்து விட்டு — நம்ப
உண்டான பேச்செல்லாம் பேசலையா

* * *

வேறுபடும் சமயமெல்லாம் புகுந்து பார்க்கின்
விளங்கும் பரம்பொருளே, நின் விளையாட்டல்லால்
மாறுபடும் கருத்தில்லை, முடிவில் மோன
வாரிதியில் நதித்திரள் போல் வயங்கிற் றம்மா

* * *

ஆங்கிலம் என்னறையே கற்றார்; அதன்றி
ஆங்கிலேயரோடு ஆவாழும் பெற்றார்;
தாங்களும் அன்னியர் ஆனார்; செல்வத்
தமிழரின் தொடர்பு அற்றுப் போனார்

* * *

இன்றைக்கோ கம்பன் இறந்தநாள் மெய்யறிவால்
இன்றைக்கோ என் கவலை ஏற்றநாள் — இன்றைக்கோ
பூமடந்தை வாழ பொறைமடந்தை வாழ்ந்திருக்க
நாமடந்தை துயருழந்த நாள்.

* ஒட்டக்கூத்தன் கம்பர் இறந்த
அன்று பாடியது *

* * *

மக்களுழந்த சிறுமையையாளும், மனையாளுழந்த
வறுமையையாளு, மிக்க வறுமை போவாத
வாதனையாளும்மை யெனவாத், தக்கவரது
ஊன் கடுத்துற் றூண் நீந்துசென்றுன்று,
தொக்கமணி நீள் ஊயானைத் தொழுது பண்ணு
மிளை சொன்னதும்

* * *

மயிர்நீப்பின் வாழாக் கவரிமா அன்னார்
உயிர்நீப்பர் மானம் வரின்

* * *

கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்
டென்னாற்றுங் கொல்லோ உலகு

* * *

தேனும் பாலும் கன்னலும் அமுது மாகித் தித்தித்தென்
ஊனுயிர் உணர்வினில் நின்ற ஒன்றை உணர்
ந்தேனே

* * *

பாகத்தில் ஒருவன் வைத்தான். பங்கயத் திருந்த பொன்னை
ஆகத்தில் ஒருவன் வைத்தான். அந்தணன் நாவில்
வைத்தான்.
மேகத்தின் மின்னின் வென்ற துண்ணிடையை
ஐயும்
மாகத்தோள் வீர பெற்றால் எவ்வளம் வைத்து
வாழ்தி

* * *

பெண்மையும் பெருமையும், பிறப்பும், கற்பெனும்
திண்மையும் ஒழுக்கமும் தெளிவும் சீர்மையும்
உண்மையும் நீயெனும் ஒருத்தி தோன்றலால்
வண்மையான் மன்னவன் புகழின் மாய்ந்ததால்.

* * *